நளினச்சினைமலர்வித்தன
நளினத்துறைதிருவே
களியைத்தருகவியேயதி
கரிணியெனமொழிவார்.

(இ-ள்.) மூன்று புளிமாங்கனியின்ருகே ஒரு புளிமாவரும். அது களிப்பைத்தருகின்றவிருத்தமாகும். பெயர்அதிகரிணியெனச் சொல்லுவார்.

புளிமாங்கனியென்பது குற்றுயிரீற்றதென்க.

22. மூன்றேடொருநான்கே
மும்மூன்ளுடுபத்தே
தோன்றுவிசுருங்கத்
தோன்றுங்கவிநாமம்
வான்றேய்மொழிவல்லார்
வைத்தார்மணிமாலை
மீன்றேய்விழிவேலால்
வெல்லப்பொருதையால்.

(இ-ள்.) மூன்று, நான்கு, ஒன்பது, பத்து இந்த இடங்களிற்றேன்று மூயிர் நெடிலாக உண்டாகும் விருத்தத்தின் பெயர் வானளவு பறந்து வியாபிக்கும் பாடைவல்லார் மணிமாலை என்று வைத்தார்.

23. அஞ்சுயிர்க்கூவிளச் சிறிறுலாகுமா
லெஞ்சலில்கேள்வியார் சிரக்விணியென்றனர்
நஞ்சமோவேல்கொலோநாமபாணங்கொலோ
அஞ்சுமிதென்கொலென்றையுறுங்கண்ணியே.

(இ-ள்.) சிரக்விணிவிருத்தம் ஐந்துமாத்திரைக் கூவிளச்சிறிறுல் வருமென்று குறைவற்ற கேள்வியுடையார் சொல்லினர்.

24. ஒன்றுமூன்றினுட னேழுபதினென்றுபதினைந்
தென்றவாவிநெடிலாய்ப்பிறவெழுத்திலகுவாய்த்

நுன்றுமாறறிகநா மொழியிலங்குவதனைப்
பொன்றுமாருயிரொனப்பொலியும்வேனயனமே.

(இ-ள்.) ஒன்று, மூன்று, எழு, பதினொன்று, பதினைந்து என்னுமிடங்களிலுள்ளவுயிர் நெடிலாய் மற்றவைகுறிலாய்ப் புணருமாறறிக.

25. முன்னதுகூவிளமாய் மூன்றதுமவ்வியலாய்ப்
பின்னதுகாயிறுதிப் பெற்றிடுகூவிளமா
யன்னதுநான்கினையு மாடருமென்றுணரோ
நன்னுதலந்துவர்வாய் நாரியர்நாயகமே.

(இ-ள்.) முதற்சீர் கூவிளமாகவும், மூன்றுவதுமந்த இலட்சணத்தைப்பொருந்தியதாகவும், இரன்டாவது கூவிளங்காயாகவும், அந்தக் கூவிளங்காயே நான்காமிடத்தையு மாண்டுவருமென்றுணர்க-எ-று.

நான்குமாத்திரைக் கூவிளமும் ஆறு மாத்திரையுடைத்தாய் நடுவினெட்டெழுத்துமிகாத கூவிளங்காயும் வருமெனக் கொள்க.

---

## சந்தக்கலித்துறை.

---

1. மூவெழுத்துமைந்தெழுத்து முற்றுவ
மேவுமென்பசேணிநாம மேலையோர்
பாவியல்பசுந்தமிழ்க் கிலர்தவே
தேவபாடைதன்னுளாய்ந்து தேர்கவே.

(இ-ள்.) மூன்றெழுத்துச்சீருங் கடையிலைந்தெழுத்துச்சீரும் புணரும் விருத்தங்கள் சேணியென்னும் பெயரைப் பொருந்துமென்று சொல்லுவர் பெரியோர். பாக்கள் பொருந்திய தமிழிலில்லாதவைகளைத் தேவபாடையிலாய்ந்தறிக—எ-று.

இவ்வுதாரணப்பாட்டால் மூன்றென்பது, மூன்று மாத்திரைத் தேமா என்க.

2. நான்மாத்திரைவெண் டளைமாக்கணடக்குறுமே
 னுன்மாத்திரைமா நளினியெனநாடுவரால்
 வான்மாத்திரையாய வளம்பெறுபாடைகடாய்
 தான்மாத்திரமாய தனித்தகைபாடையினே.

(இ-ள்.) நான்குமாத்திரையளவுள்ள வெண்டளையிற் புணர்ந்த மாச்சீர்கணடக்குமானல் நான்குமாத்திரை மாச்சீர் கலித்துறையோடு நளினி விருத்தமாகுமென்று அதிக சிறந்ததும் வளப்பமான பாடைகளுக்குள் தாயுமானஒப்பற்ற பெருமையுடைய பாடையில் ஆராய்ந்து சொல்லப்படும். முதல் நிரையசையானல் நளினியாகுமென்க.

3. குற்றக்கரநான்களவை
 யொருசீர்குழுவிப்பின்
 முற்றக்கடையோர்நெடிலெய்
 திடும்வெண்டளைமுற்றும்
 பற்றக்குறியாய்பனைமா
 மூலைவெம்பணவல்குற்
 கற்றைக்குழலார்கருநீள்
 நயனக்கனிவாயே.

(இ-ள்.) நான்குமாத்திரையளவுள்ள வைந்துசீர் கூடிப்பின்னிறுதியில் முடிவெய்த ஓர் நெட்டெழுத்தைப் பொருந்தும். முற்றும் வெண்டளையிற் கூடும். அதைக்குறிகொள்க.

4. முன்னேதேமாபின்னதுதேமாமொழிமூன்றில்
 துன்னுஞ்சிரோகூவிளநான்கிற்றுறுதேமா
 பொன்னேயைந்திற்புல்லியசிரோபுளிமாங்காய்
 சொன்னர்பேரோமத்தமயூரத்தொடர்பென்றே.

(இ-ள்.) முதற்சீர் தேமா, அதற்குப் பின்னுள்ள துந்தேமா, சொல்லுகின்ற மூன்றுமிடத்திற் பொருந்துஞ் சீர்கூவிளம் நான்கில் நெருங்குகின்ற தேமா ஐந்திற் சேருகின்ற சீர்புளிமாங்காய். இப்படி வருமானல் மத்தமயூர விருத்தமென்று அதற்குப் பெயர் சொன்னர்.

நான்குமாத்திரைச் சீர்களாலாகுஞ் சந்தக்கலித்துறை முன்னும் பின்னுஞ் சொல்லப்படுவதால் இவ் விருத்தத்திற் சொல்லப்பட்ட தேமா புளிமாச்சீர்கள் நான்கு மாத்திரையளவினவென்பது கூறுமலேயமைகின்றது.

5. குற்றுயிராலிறுகூவிள
 மைந்தொடுகூடியநேர்
பெற்றுமஸ்வகதிப்பெய
 ரென்றனர்பேரியலோர்
சிற்றிடைமுற்றிழைமைந்நய
 னக்கனிசேயிதழும்
பொற்றிதலைப்பொலிபூண்முலை
 யேந்துபொலன்கொடியே.

(இ-ள்.) குற்றெழுத்தீற்றுக் கூவிளமைந்தோடு நேரசையைக்கொண்டு முடியு மஸ்வகதி விருத்தமென்று சிறந்த இலக்கணங்களையறிந்தோர் சொல்லினர்.

6. நீளாதவுயிரீற்றினேரைந்து
 மாங்காய்ப்பினீடக்கரத்
தாளாளுதித்திட்டமாங்காய்க்
 கலிக்காயசந்தத்துறை
யாளாதகவியல்லவழகார்
 பசுங்கிள்ளையனமேயெனும்
வாளாயமைக்கண்ணடங்கா
 முலைக்குன்றுமடமங்கையே.

(இ-ள்.) குற்றெழுத்தாகிய இறுதியையுடைய வைந்துமாங்காயு மதன்பின்னரொரு நெட்டெழுத்துமுடைய பாதத்தினாலுண்டாகு மாங்காய்ச்சீர்ச் சந்தக் கலித்துறை புலவராலாளப்பட்ட விருத்தமேயாம்-எ-று.

7. நாலொருமாத்திரையளவிற்றோன்றியநாலிருசீர்
பாலறவிணையாப்பாடினர்பலதீந்தமிழோரொன்
றுலதுகலவைச்சந்தத்துறையென்றறைகிற்பாய்
பாலதுபுரையும்பாய்மனமிளகும்பனிமொழியே.

(இ-ள்.) நான்குமாத்திரை யளவினாலுண்டாகிய எட்டுச்சீர்களைப் பேதமின்றிப் புணர்த்திப் பல மதுரமான தமிழ்க்கவிகள் பாடினரொன்றுலதைக் கலவைச்சந்தத்துறையென்று கூறுவாய்.

8. முதலுமூன்றதுமாவினத்தொருமூன்றெழுத்
துதவுசீரதிரண்டுநான்கொருநான்கெழுத்
துதவுகூவிளமைந்திலோங்கியகூவிளம்
மதிநுதற்கலையல்குன்மந்தளிர்மேனியே.

(இ-ள்.) முதற்சீரும் மூன்றுவது சீரும் மூன்று மாத்திரையளவுள்ள மாச்சீராகவும்,இரண்டாவதும் நான்காவதும் நான்கெழுத்து அளவுள்ள கூவிளமாகவும் ஐந்தாவதில் நீண்ட கூவிளமாகவும் பெறும்-எ-று.

9. முக்குழிலினிற்றளவு பத்தனாய
தாகிவருமூன்றினுடனி
டக்கரமுமற்றெரிரு காயுமுடை
தாளினையுமாய்ந்தறிகவே
மிக்கவருரைாத்தகவியாகுமென
வன்னநடைமின்னினிடையே
செக்கராவிந்தவதனக்கரிய
கூந்தலொளிசெய்யதிருவே.

(இ-ள்.) மூன்று குற்றெழுத்தை இறுதியிலு டைய வைந்துமாத்திரையளவாகிய வைந்துகாச சிருமொருநெட்டெழுத்துமுள்ள பாதத்தைப்பெரி யோராண்ட விருத்தமாக ஆராய்ந்தறிக—எ-று.

10. நீடுயிர்க்கூவிளக்கருவிளச்
சீரினுனேர்ந்தவற்றைப்
பாடுறும்பாவெனப்போற்றினர்
பஃறுறைப்பாவெனுந்தண்
ணீடலைக்கடலையாரறிவெனுங்
கிரியினுனிலைமருந்தைத்
தேடினரண்டரும்பருகவீரந்
தென்மொழிப்புலவரம்மா.

(இ-ள்) பல துறைகளையுடைய பாவென்னுங் குளிர்ந்த நீண்ட கடலையரிய அறிவென்னுமலையினல் நிலைபெறச்செய்யும் அமிழ்தை தேவரும் புசிக்கக் கடைந்த இனிய தமிழ்ப்புலவர் நீண்டவுயிரீற்ற வி ளச்சீரினுலுண்டாகும் விருத்தத்தைப் பெருமை தங்கிய விருத்தமாகக்கொண்டார்.

11. ஐந்துயிர்க்காயோடுமைந்துயிர்விளத்
தோடுமைந்திடத்தே
யைந்திநெடிரண்டுபெறுகாய்கனிச்
சீரோடுமோகுமன்றே.

(இ-ள்) ஐந்துமாத்திரைக் காய்ச்சீராலும், விள ச்சிராலும் ஐந்தாமிடத்தில் ஏழுமாத்திரைக் காய்ச் சீராலும் கனிச்சீராலுமாகும்-எ-று.

12. நேரொன்றுகாயுநிறையொன்றுநேருமுதலீ
றீரொன்றுடொன்றினிறையொன்றுகாயதியலு
நேரொன்றுநேரினிகழ்வாமிகுந்தவிடமே [லே
வாரொன்றுகொங்கைமதி போன்றிலங்குநுத

(இ-ள்) முதற்சீருங் கடைச்சீரும் தேமாங்காய்ச்சீர் புளிமாச்சீராகும். மூன்றில் புளிமாங்காய்ச்சீர் பயிலும். மற்ற இடங்களில் தேமாச்சீர் வரும் எ-று.

அறுசீர்ச்சந்தவிருத்தம்.

1. மூன்றெழுத்தினாறுசீருமுற்றெழுத்துமே
தோன்றுமோரடிக்குநுண்மருங்குதொண் [டையே
போன்றிலங்குசெய்யவாய்ப்புலம்புபொற் [றொடி
வான்றயங்குமிந்துவாண்முகப்பொலன்கொடீ

(இ-ள்) மூன்றுமாத்திரையளவுள்ள ஆறு சீரும் ஒருநெட்டெழுத்து மோரடிக்குத்தோன்றும்-எ-று.

2. குறையாப்புளிமாவிருமூன்றுகடைக்
குறியாக்குறியொன்றே
புறையாவருமாலொளிவாண்முகமைக்
குழலாரொருமாதே.

(இ-ள்) நீண்ட புளிமாச்சீர் ஆறும் கடையில் நெட்டெழுத்தொன்றும் பொருந்திவரும்-எ-று,

3. குற்றுயிரீற்றறு கூவிளேயோடொரு
நெட்டுயிர்கூடிடுமால்
பொற்றளிர்மேனியருங்குவளேக்கணி
லங்குறுபூங்கொடியே.

(இ-ள்) குற்றுயிரீற்றிலுடைய ஆறு கூவிளச்சீரோடு நெட்டெழுத்துக்கூடுமென்றவாறு.

4. நாலக்கரவிளேயொடுமாவிறுதியி
லொருகாய்கடைபெறுமால்

தாலக்கனிமூலநீலக்குழலொரு
சாலத்தனுவிடையே.

(இ-ள்) நான்கெழுத்தளவுள்ள விளச்சீரும் மாச்சீரும் கடையிலொரு காய்ச்சீரும் நடக்கும்—எ-று.

5. காய்விளமடுத்தவொருசீர்விளமிறுத்த
கனிகாமுறவுதித்தியலுமால்
வேய்புரைதுணைக்கரமுமாந்தளிரொனத்திகழு
மேனியுமுடைச்சுரிகுழல்
காய்விளமடுத்தவொருவைந்திறுமிடத்தினது
காணுறுநெடிற்கடையெனப்
பாய்புனலுடுத்தவுலகோரிதனெழுத்தளவு
பாங்குறவிதித்தனரரோ.

(இ-ள்) விளத்தையடுத்த காய்ச்சீர்களும் விளமானது கொண்டுமுடிந்த வொரு கனிச்சீருந்தோன்றி யினிதாய் நடக்கும். விளத்தை யடுத்தனவாகிய காய்ச்சீர்களுக்கு மாத்திரை ஐந்தாகும். கடைச்சீர் ஐந்துமாத்திரையோடு கடையில் நெட்டெழுத்துளதாய்க் காணப்படுமென்று அலைகின்ற கடல்சூழ்ந்த வுலகத்தோரிதற்கு எழுத்தளவு விதித்தாரென்க.

விளமடுத்தகாயெனவே விளங்கா யென்பதும் விளமிறுத்த கனியெனவே விளங்கனியென்பதுங் கருத்தென்க. விளங்காய்க்கு மாத்திரையைந்தென்றமையால் மூன்று குறிலீற்று விளங்காயென்பதும் ஏழுமாத்திரை விளங்கனியெனவே மூன்று குறிலுமதற்குப் பின்னரோர் நெட்டெழுத்தும் உடைய விளங்கனியென்பதும் பெறப்பட்டது. நெட்டெழுத்தே யன்றிக் குற்றெழுத்தும் இக்கனிச் சீரந்தத்தில் வருமேயெனின், 'அந்தத்துறை குன்றிய வக்

காமே, சந்தத்தினி னிடுயிராஞ்சமமாய்' என்னும் விதிப்படி. அக்குறிலும் நெடிலெனவே கொள்க. ஐந்துமாத்திரை விளங்காய்ச்சீர் ஐந்து வருமென்பது உதாரணத்தாற்காண்க.

6. கள்ளுறுபோதோகடுங்காமனம்போ
சருங்காலனேவன்றெனி
னள்ளார்நடுங்கத்தனிச்சூரனேயேந்து
நாமப்புலால்வேல்கொலோ
கள்ளார்கடித்தாமரைத்தேனருந்துங்
கரும்புள்ளெனத்தக்கவோ
உள்ளுறுகாமக்கொடுந்திமருந்தே
யொளிக்கார்நிறக்கண்கவே

(இ-ள்) இவ்விருத்தம் குறிலீற்று மாங்காய்ச்சீரினல் தோன்றினமை காண்க.

7. ஓதவார்கடலகத்துற்றவாரமிழ்தெனு
வோநினூர்புலவர்மற்றுந்
நிதிலாத்தீங்கனிச்சுவையெனப்பாலெனத்
தேமொழிக்குவமைசொன்னூர்
எதமேபுலனுருவழிநினைப்பாலவை
யின்பமேநல்கிலாவால்
யாதெனக்கூறுகேணின்மொழிப்பண்பைநா
னேந்திழைப்பொற்கொடிக்கே.

(இ-ள்) இவ்விருத்தம் ஒற்றடுத்த குறிலேயேனும் நெட்டெழுத்தையேனு மிறுதியிலுடைய விளச்சீர்களால் வந்தது.

8. ஓதியவுடம்பதணையாதகுறிலீறென்ற
தொழிகூவிளக்கருவிளச்
சாதியெனநடுமெய்ம்மிகாவிளங்காயெனத்
தனிவந்தகுறிலிற்றகாய்ப்

பேதமெனவருமைந்துமாத்திரைச்சீர்களும்
　　பின்னோர்நெடிற்பெற்றவும்
மேதகுவிருத்தமெனவான்றமிழ்ப்புலவருற
　　வேண்டினரறிந்துமாதோ.

(இ-ள்) சொல்லிய ஒற்றையடுக்காத குறிலாலாகிய இறுதியைப்பெறாத கூவிளக் கருவிளச்சீர்களும் நடுவேயொற்றுமிகாத விளங்காய்ச்சீர்களும் தனிக்குறிலீற்றுக் காய்ச்சீரின் பேதங்களும் ஆகிய இந்த ஐந்துமாத்திரையுடைய மூவிதச்சீர்களும் ஈற்றில் இவைகளை யொற்றடுத்த சீர்களும் வரும் விருத்தத்தை யதன் பெருமையையறிந்து உயர்ந்த தமிழ்ப்புலவர் சிறப்புற்ற விருத்தமாக மிகவும் பாடினர்—எ-று.

எனவே நெடிலேனும் மெய்யேனு மிறுதியடையப்பெற்ற விளச்சீர்கள் (1) மூன்று குற்றெழுத்தால் முடிந்தவிளங்காய்ச்சீர்கள் (2) குறிலீற்றுமாங்காய்ச்சீர்கள் (3) ஆகிய இம்மூவகைச்சீர்களும் ஐந்துமாத்திரையாகலான், முதலைந்திடங்களில் வரத்தக்கன. இறுதியாறுவது சீராக வருவன எவையெனில் ஒரு நெடிலையீற்றிற்பெற்ற ஏழுமாத்திரை யளவுள்ள இம் மூவகைச்சீர்களுமேயாம். அவைகளாவன: (1) மெய்யெழுத்து நடுவே மிகுந்த விளங்காய்ச்சீர்களும், (2) மூன்று குறில் நடுவேபெற்ற விளங்கனிச்சீர்களும், (3) மாங்கனிச்சீர்களும் ஆம்.

9. ஆதிவாழிநெடிலக்கரமுக்குறி
　　லாகுஞ்சிறுகாயே
கோதிலண்டையதுகுற்றுயிரீற்றிரு
　　கூவார்விளமென்றே
யோதுமூன்றதுடனைன்கதுமோங்கிய
　　தேமாபுளிமாங்காய்

சீதவெண்மதிமுகக்கருநீள்விழி
மின்னேர்திருமாதே.

(இ-ள்) முதற்சீர் (குற்றுயிரீற்றுத் தேமாவா கிய) வாழிச்சீரொன்றும் நெட்டெழுத்தொன்றானு மூன்று குற்றெழுத்தானுமாகிய சிறிய கூவிளங்காய் சசீரிரண்டாவதென்றும் மூன்றாவதும் நான்காவ தும் குறிலீற்றுக்கூவிளமென்றும் ஐந்தாவது (நெடி லீற்றுத்) தேமாவென்றும் ஆறாவது புளிமாங்கா யென்றுஞ் சொல்லுக—எ-று.

அடியில்வருந் தேவாரங்களுமிவ்வினத்தவாம்.

"தோடுடையசெவியன்விடையேறியோர்
தூவெண்மதிசூடி
காடுடையசுடலைப்பொடிபூசியெ
னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமலரான்முனைநாட்பணிந்
தேத்தவருள்செய்த
பீடுடையபிரமாபுரமேவிய
பெம்மானிவனன்றே."

இதில் 'டையசெவி' 'டையசுட' 'டையமல' 'டையபிர' என்பவற்றை ஐகாரத்தை நீட்டிக் கூவிளங்காய்ச்சீர்களாகக் கொள்க.

"நாணுதல்செய்திறைகாணியமாலொடு
தண்டாமரையானும்
நீணுதல்செய்தொழியந்நிமிர்ந்தா
னெனதுள்ளங்கவர்கள்வன்
வாணுதல்செய்மகளிர்முதலாகிய
வையத்தவரேத்த
பேணுதல்செய்பிரமாபுரமேவிய
பெம்மானிவனன்றே."

இதில் 'நல்செய்திறை' 'நல்செய்தொழி' 'நல்செய்மக' 'நல்செய்பிர' என்பவற்றை யகரத்தை நீக்கி கூவிளங்காய்ச்சீர்களாகவே கொள்க.

---

## எழுசீர்ச் சந்தவிருத்தம்.

---

1. வாங்கருங்குணத்தவேழு
   வாழியோடுநெட்டெழுத்
   தீங்குறுஞ்சுகந்திமற்று
   மேற்குமாவியல்புளி
   தீங்கரும்பொடமுறுதேன்
   பொதிந்துசெய்யசெப்பையுங்
   கோங்கரும்பையுந்தொலைத்த
   குவிமுலைப்பெதும்பையே.

(இ-ள்) வளைத்தற்கரிய குணத்தையுடைய வாழியென்னும் வாய்பாட்டுக்குமிலீற்றுத் தேமாச்சீரோழிஞெடு கடையில் நெட்டெழுத்தையும் சுகந்திவிருத்தம் இவ்விடம் பெறும். புளிமாச்சீரையும் பெறும்-எ-று.

புளிமாச்சீரென்பது குற்றெழுத்திற்றுப் புளிமாவென்க. புளிமாச்சீர் கலந்துவருகையில் உத்சாகமென்னு நாமத்தைப்பெறும். முதலிரண்டடியும் சுகந்திக்கு உதாரணமாகவும், பின்னிரண்டடியும் உத்சாகவிருத்தத்துக்குதாரணமாகவுங் கொள்க.

2. கூவிளமேழுகுலாவநெடிற்கடை
   கொள்வதுமானினிநேரசைசே
   ராவிளமாதிநடப்பதுபோர்கவி
   ராசவிராசிதமென்றனரால்

கூவிளமேகருவார்விளமேயிவை
கூடிவசாத்துவிகாசுலவும்
பூவிளவெம்முலையாமமுதாரிரு
பொற்குடமேந்துபொலன்குழையே.

(இ-ள்) ஏழு கூவிளச்சீர்கள் அழகாகப் புணரக் கடையில் நெடிலைக்கொள்வது மானினியாகும். நிரையசையாதியாகிய விளம் (கருவிளமென்றபடி) முதற்கண் நடப்பதின் பெயர் கவிராச விராசிதம் என்று சொல்லினர். கூவிளச்சீர் முன்னும், கருவிளச்சீர் பின்னுமாகக்கூடும் விருத்தங்களின் பெயர் சாத்துவியாகும்.

கவிராச விராசிதம், சாத்துவி இவைகளுக்கு தாரணம் வந்த விடத்திற்காண்க.

3. ஒருநான்கிரண்டொடிருமூன்றிடத்தி
லொருகேர்முனைந்தசிறுமா
புரைநீங்குமற்றமுதலைந்துமூன்று
புளிமாவிணைந்தசிறுகா
யொருநான்குமூன்றுபுளிமாவளைந்த
வருவாரிலங்குநுதலே
வரினேயதற்குவடசொற்கவிசர்
மணிமாலமென்றுசொலுவார்.

(இ-ள்) நான்கு, இரண்டு, ஆறு ஆகிய இந்த இடங்களில் குறிலீற்றுத் தேமாவும், குற்றம் நீங்கிய முதலைந்து மூன்று ஆகிய இடங்களில் குறிலீற்றுப் புளிமாங்காயும், ஏழாமிடத்தில் புளிமாவும் வந்தால் அதற்கு வடமொழியாசிரியர் மணிமாலமென்னும் பெயரைச்சொல்லுவார்.

4. கத்துகின்றசிலம்புமேகலை
கார்க்குழற்களிவண்டுநா

லொத்தமெல்லிடைநுண்ணிதென்றிறை
யுள்ளவிருகொங்கைகாள்
இத்தகைத்தெழுசீரியங்கு
மிலங்கெழிற்கவிதோன்றிடின்
மத்தகோகிலமென்றுமூதறிவோர்
வழங்கினர்நாமமே.

(இ-ள்) இத்தன்மையான ஏழுசீருள்ள விளங்குகின்ற அழகான விருத்தம் தோன்றினல் மத்தகோகிலமென்று பேரறிவோர் நாமம் வழங்கினர்-எ-று.

இதன் விதியை யிவ்வுதாரணப்பட்டாற் காண்க.

---

## எண்சீர்ச்சந்தவிருத்தம்.

---

அழிவறுகாயமீட்டிமடமாந்தருய்ய
வருநூலறைந்தபெரியோர்
மொழிதருசந்தமுற்றுமியலின்னதென்று
மொழிவானெடுத்தலரிதே
கழிபெருவாரிநீரதுபற்றியீங்கு
கழறுற்றசந்தவிதியை
விழியெனவைத்துமற்றமொழியாதசந்த
விதிதம்மையோர்ந்துகொளலே.

(இ-ள்) உண்மையறிவில்லாத மனிதர்களுய்யும் பொருட்டு அரிய நூல்களைச்செய்து அழிவில்லாத தேகத்தையடைந்த பெரியோர் மொழிந்த சந்தங்களெல்லாவற்றிற்கு மிலக்கணங் கூறப்புகுதல் அருமை அது கடலைப்போலும்மிகவும்விரிந்திருக்கிறது. ஆகையா லிவ்விடத்திற் சொல்லிய விதிகளைக் கண்ணாகக்கொண்டு மொழியாதொழிந்த மற்றச் சந்தங்களின் விதிகளைக் கண்டறிந்துகொள்க—எ-று.

கூறு தொழிந்த விருத்தங்களைப் பற்றிச் சொல்வதால் இவ்விருத்தமும் முன் கூறாத விருத்தமாகச் செய்யப்பட்டது.

(1) முதலாவது இந்த விதியால் முன்காட்டிய சந்த விருத்தங்களிரட்டிவருவனவற்றைக் கொள்க. அவை வருமாறு.

" அங்கிங்கெனாதபடி யெங்கும் பிரகாசமா
யானந்தபூர்த்தியாகி
அருளொடு நிறைந்ததெது தன்னருள்வெளிக்
யகிலாண்ட கோடியெல்லாந் [குளே
தங்கும்படிக்கிச்சை வைத்துயிர்க்குயிராய்த்
தழைத்ததெது மனவாக்கினிற்
றட்டாமனின்றதெது சமயகோடிகளெலாந்
தந்தெய்வ மெந்தெய்வமென்
றெங்குந்தொடர்ந்தெதிர் வழக்கிடவுநின்றதெ
வெங்கணும்பெருவழக்கா [து
யாதினும்வல்லவொரு சித்தாகியின்பமா
மென்றைக்குமுள்ளதெதுமேற்
கங்குல்பகலறநின்ற வெல்லையுளதெதுவெது
கருத்துக் கிசைந்ததுவே
கண்டனவெலாமௌன வுருவெளியதாகவுங்
கருதியஞ்சலி செய்குவாம்."

"பண்ணேனுனக்கான பூசையொருவடிவிலே
பாவித்திறைஞ்ச வாங்கே
பார்க்கின்றமலருடு நீயேயிருத்தியப்
பனிமலரொடுக்கமனமு
நண்ணேனலாமலிரு கைதான்குவிக்கவெனி
னாணுமென்னுளநிற்றிநீ
நான்கும்பிடும்போ தரைக்கும்பிடாதலா
னான்பூசை செய்யன்முறையோ

விண்ணேவிண்ணுறியாம் பூதமேநாதமே
 வேதமே வேதாந்தமே
மேதக்ககேள்வியே கேள்வியாம் பூமிக்குள்
 வித்தெய வித்தின்முளையே
கண்ணேகருத்தே யெனெண்ணேயெழுத்தே
 கதிக்கான மோனவடிவே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
 கருணாகரக்கடவுளே."

"தாதஞ்சுநாழிகையி லாறுநாழிகைதனிற்
 சொற்சந்த மாலைசொல்லத்
துகளிலாவந்தாதி யேழுநாழிகைதனிற்
 றொகைபட விரித்துரைக்கப்
பாதஞ்செய்மடல்கோவை பத்துநாழிகைதனி
 பரணியொரு நாண்முழுதுமே [ற்
பாரகாவியமெலா மோரிருதினத்திலே
 பகரக் கொடிக்கட்டினேன்
சீதஞ்செயுந்திங்கண் மரபினனீடுபுகழ்
 செய்பதிரு மலைராயன்முன்
சிறுமாறென்றுமிகு தாறுமாறுகள்சொற்
 றிருட்டுக் கவிப்புலவரைக்
காதங்கறுத்துச் சவுக்கிட்டடித்துக்
 கதுப்பிற் புடைத்துவெற்றிக்
கல்லணையினொடுகொடிய கடிவாளமிட்டேறு
 கவிகாள மேகநானே."

"ஏடாயிரங்கோடி யெழுதாமறன்மனத்
 தெழுதிப்படித்த விரகன்
இமசேதுபரியந்த மெதிரிலாக்கவிவீர
 ராகவன் விடுக்குமோலை
சேடாதிபன்சிர மசைத்திடும்புகழ்பெற்ற
 திரிபதகை குலசேகரன்
தென்பாலைசேலம் புரந்துதாகந்தீர்த்த
 செழியனெதிர் கொண்டுகொண்க

பாடாதகந்தருவ மெறியாதகந்துகம்
பற்றிக்கொலாத கோணம்
பறவாதகொக்கனற் பண்ணுறாதகோடைவெம்
படையிற்றொடாத குந்தம்
சூடாதபாடலம் பூவாதமாவொடு
தொடுத்துமுடியாதசடிலம்
சொன்னசொற்சொல்லாத கிள்ளையொன்றெந்
துடிக்கவர விடல்வேண்டுமே." [குந்

இந்நான்கு விருத்தங்களும் 8-வது அறுசீர்ச் சந்தமாகிய 'ஒழிய வுடம்பதனையாதகுறில்' என்னும் விருத்த மிரட்டிய பன்னிருசீர்ச் சந்த விருத்த மென்க.

"குவளைப்பிழிசெங்கு முதப்பிழிகோ
கனகப்பிழிகூடிக்
கோதறுசேதக மாகிக்கூடினற்
கொழுவுறு சீதைதொறுந்
தவளத்தரளத் தொடுபிழியூறற
தும்பக் கடைசியர்தம்
தன்னைகையொடுமித ரூறலொடுஞ்சம
ருமெனவுட்சினவிப்
பவளக்கடிகைப் பேரணிசரிதிகழ்
பங்கயமென்கையாற்
பனிலத்தரளத் திரளைத்திடரிற்
பழனக்களைதரவே
திவலுற்றிடு தொண்டைரநன்றடா
செங்கோ செங்கிரை
சீருர்போரூர் வீரமயூரா
செங்கோ செங்கிரை."

இவ்விருத்தம் 4-வது அறுசீர்ச் சந்தமாகிய 'நாலக்கரவிளையோமோ' என்பது இரட்டிவந்ததென்க.

"காரொனவாருயிர் மீதருளேபொழி
கண்ணனை விண்ணவனைக்
கந்தனையெந்தையை வந்தனையன்பர்
கடும்பகை கொன்றவனைச்
சிர்சமராபுரி யாளனைமாருறு
தேவர்மணாளனையோர்
சின்மயரூபனை நன்மையெலாமுறு
சேயினை யருள்புரிக
வோர்வரிதாமுயி ரியாவையுநேர்வினை
யொத்துமலப்பகைபோய்
ஒண்சுகமேவிட வைந்தொழிறந்திடு
முத்தமசிற் பரமாய்ச்
சேருருவாயரு வாயிருவகையுஞ்
செறிபொருளாய் நிறைவாய்ச்
செம்முகமைந்தொடு செம்மையினின்றருள்
செய்த சதாசிவமே."

இதுவும் மேற்காட்டிய விருத்தமேயாம்.

"கற்றானொனினும் பதினாலுலகுங்
கண்டாரொனினுந் தண்டாமிகுபற்
றற்றாரொனினுந் திருமாலடியா
ரல்லாதவர்வீ டில்லாதவரோ
பொற்றாமரையாள் கணவன்துயிலும்
பொற்கோயிலையே புகழ்வார்பணிவார்
மற்றாரொனினும் பெற்றாரவரோ
வானோர்திருமாமணி மண்டபமே."

இது நான்குமாத்திரை மாச்சீரினாலாகிய 'வேதப் பொருளார்' என்னும்கலிவிருத்தமிரட்டியதென்க.

"வேட்டநல்வரமளித்துவிடுக்கும்
வீறிலார்கள்பலர் விண்ணவர்மாட்டும்

வேட்டநல்வர மனைத்தும்வழங்கார்
வேட்டமாத்திரை விளைப்பவர்சில்லோர்
வேட்டநல்வர மளித்ததன்மேலும்
வேறுநல்வரம் வினவியளிப்ப
வேட்டவண்ணல் கருணைத்திறநோக்கி
விம்மிதப்புணரிவிம்முமுளத்தான்.''

இது சுவாகத விருத்த மிரட்டி வந்ததென்க.

''தொண்டரடித்தொழலுஞ்சோதியிளம்பிறையுஞ்
சூதனமென்முலையாள் பாகமுமாகிவரும்
புண்டரிகப்பரிசா மேனியும்வானவர்கள்
பூசலிடக்கடனஞ்சுண்ட கருத்தமருங்
கொண்டலெனத்திகழுங் கண்டமுமெண்டோளு
கோலநறுஞ்சடைமேல்வண்ணமுங்கண்குளிரங்
கண்டுதொழப்பெறுவ தென்றுகொலோவடியே
கார்வயல்சூழ்கானப்பேருறைகாளையையே.'' [ன்

''எய்சிலைநீள்புருவத் தேந்திளவெம்முலையா
யெம்மிடையெம்மடியார் தம்மிடையெய்தலுறச்
செய்பிழையன்றிவருந் திவினையேனையெலாஞ்
சீர்வளர்காஞ்சியினிற் றேய்ந்துதவம்பெருகி
மெய்திகழ்நாற்பயனு மேவநிநீஇனமால்
வேறுமுனக்கினி யென்வேண்டுவதென்றிடலு
மொய்யொளிமேனியி னன்முன்றொழுதேத்தியி
முரன்முகத்தலரப் பேசுதலுற்றனளால்.'' [ள

இவை 24-வதாகிய 'முன்னது கூவிளமாய்' என்னுங் கலி விருத்த மிரட்டி வந்தனவென்க. இவைபோலு மற்ற விருத்தங்களிரட்டி வருவனவுங் கொள்க.

(2.) இரண்டாவது இந்தவிதியால் நேரசையுள்ள சீர்வருமென்புழி மாத்திரையளவிலொத்த நிரைய சையுள்ள சீர்வருவனவும் நிரையசையுள்ள சீர்வரு மென்புழி மாத்திரையளவில் பேதிக்காத நேரசை

யுள்ள சீர்வருவனவும் வேறு எந்தச் சீர்க்கேனு மாத்திரையிலொத்த வேறு எந்தச் சீரேனும் வரு வனவுங்கொள்க. அவை வருமாறு.

"மண்ணுளார்விண்ணுளார் மாறுளார்வேறுளார்
எண்ணுளாருளரவர்க் கியலுளாரிசையுளார்
கண்ணுளாராயினூர் பகையுளார்கழிநெடும்
புண்ணுளாராருயிர்க் கமிழ்தமேபோலுளார்."

ஐந்து மாத்திரைக் கூவிளச் சீரினாலாவது சிரக்வி ணீ விருத்தமாகையால் அதற்கு இது சிறிது பே தப்பட்டு 'உளரவர்க்' 'இயலுளார்' 'இசையுளார்' 'பகையுளார்' 'கழி நெடும்' 'அமிழ்தமே' என நேரசைமுதலாகிய கூவிளத்துக்கு நிரையசை முத லாகிய கருவிளச் சீரைக்கொண்டது.

"வளையார்தோள் பொடியாடவைகுவாய்
தளைமேலாயுறு தன்மையீதெனக்
களையாதேனிடு பூசல்கண்டுமொன்
றுளையாயென் வயினான்ம்யாவதோ."

சுத்த விராட்டுக்கு முதலசை நேராகையால் இது அதற்கு பேதித்து நிரையசை முதலிற்கொண்டது.

"மறைதுளங்கினுமதிதுளங்கினும்
வானுமாழ்கடல்வையமு
நிறைதுளங்கினுநிலைதுளங்குறு
நிலைமைநின்வயினிற்குமோர்
பிறைதுளங்குவனையபேரொளி
றுடையபேதையர்பெருமைநின்
இறைதுளங்குறுபுருவமென்சிலை
யிடைதுளங்குறவிசையுமோ."

இதில் நேரசை முதலாகிய சீர்களுள்ள மத்த கோகிலத்தில் நிரையசைமுதலாகிய சீர்கள் வந்தன.

"மலையேபோல்வான்மால்கட
லொப்பான்மறமுற்றிக்
கொலையேயொப்பான்கூற்றை
நிகர்ப்பான்கொடுமைக்கோர்
நிலையேபோல்வானீர்மை
யிலாதானிமிர்திங்கட்
கலையேபோலுங்கால
வெயிற்றான்கனல்கண்ணான்."

நேரசை முதலாகிய மாச்சீர் முதலில் வருமென்ற மத்த மயூரத்தில் நிரையசை முதலாகிய மாச்சீர் முதலில் வந்ததென்க.

"பொய்யுரைத்துலகினிற்சினவினார்
குலமறப்பொருதுதனவே
னெய்யுரைத்துறையினிட்டறம்வளர்த்
தொருவனுய்ந்நெறியினின்றான்
மையுரைத்துலவுகண்மனைவிபால்
வரமளித்தவைமறாதே
மெய்யுரைத்துயிர்கொடுத்தமாரும்
பெறுகிலாவீடுபெற்றான்."

'நெடுயிர்க் கூவிளக்கருவிளக்' என்னும் 5-வது விருத்தத்தில், கடையில் ஏழு மாத்திரையுள்ள விளங்காய்ச்சீரிருக்குமிடத்தில் ஏழு மாத்திரைக் கனி வந்ததென்க.

எந்தாய்பண்டொரிடங்கர்விழுங்க
முந்தாய்நின்ற முதற்பொருளேயென்
றுந்தாய்தந்தை யினத்தவனாக
வந்தானென்றன் மனத்தினனென்றான்.

தோதகத்தில் முதற்சீர் கூவிளமாகாது நால் மாத்திரையே யுள்ள தேமாவந்த விருத்தமென்க.

"பூணித்நிரையுரைசெய்தனே யதனுலுரைபொது
பாணித்தருபிறிதென் சிலபகர்கின்றதுபழியா [வே
ருணித்தலேயிடுகின்றிலனனிவந்துலகெவையுங்
காணக்கடிதெதிர்குத்துதியென்ருன்வினைகடியான்"

அதிகரணீயென்னும் விருத்தத்துள் புளிமாங்கனி முதலில்வாராது தேமாங்கனிவந்த விருத்தமிதுவென்க.

"இத்தன்மையெய்துமள வின்கணின்ற
விமையோர் களஞ்சியிதுபோ
யெத்தன்மை யெய்திமுடியுங்கொலென்று
குலேகின்ற வெல்லேயிதன்வா
யத்தன்மைகண்டு புடைநின்ற வண்ணல்
கலுழன்றனன்பின் மிசையாம்
சித்தங்கலங்குமிது நீரமெள்ள
விருளுடுவெந்துதெளிவான்."

இது நிரையசைக்கு நேரசைமுதலில் வந்த மணிமாலவிருத்தம்.

"எழுதுகுங்குமத்திருவி னேந்துகோ
டுழுதமார்பினு னுருகியுள்ளுறத்
தழுவிநிற்றலுந் தாழ்ந்துதாளுறத்
தொழுதுமாருதிக் கினியசொல்லுவான்."

இது சம்மதவிருத்தத்தில் மூன்ருவது இடத்தில் மூன்றுமாத்திரைத்தேமா இருக்கவேண்டியதற்குப் பதில் மூன்றுமாத்திரைப்புளிமா வந்த விருத்தமென்க.

"தூணுடை நிரைபுரை கரமவைதொறுமக்
கோணுடை மலேநிகர் சிலேயிடைகுறையச்
சேணுடை நிகர்கணே சிதறினனுணர்வோ
டூணுடையுயிர்தொறு முறைபுறுமொருவன்.

இது நேரசைக்கு நிரையசைவந்த தோதகம் என்க.

“குஞ்சரமன்னையார்சிந்தை கொளின்னையார்
பஞ்சினையணிவார் பால்வளைதெரிவார்
அஞ்சனமெனவா ளம்புகளிடையே
நஞ்சினையிடுவார் நாண்மலர்புனைவார்.”

இதுவும் தோதகவிருத்தத்தில் இரண்டாவது கூவிளத்துக்குப் புளிமாவந்த விருத்தமென்க.

“ஏந்திளமுலையாளே யெழுதரு
வெழிலாளே
காந்தளின் முகைகண்ணிற்கண்டொரு
களிமஞ்ஞை
பாந்தளிதெனவுன்னிக் கவ்விய
படிபாராய்
ஈந்தளவுகள்செய்யும் சிறுகுறு
நகைகாணாய்.”

இது ‘முன்னது கூவிளமாய்’ என்னும் விருத்தத்தில் இரண்டாவது நான்காவதுங் கூவிளங்காயல்லாமல் புளிமாங்காயாகி மாத்திரை பேதமின்றிவந்த விருத்தமென்க.

“ஆடினானன்னமா யருமறைகள் பாடினான்
நீடுநீர்முன்னைநா னெறிமுறையினேமிதாள்
சூடினான்முனிவர்தந்தொகுதிசேர்சோலைவாய்
மாடுதான்வைகினா னரிகதிரும்வைகினான்.”

இது சிரக்விணிவிருத்தத்தில் கூவிளத்துக்கு கருவிளங்காய்வந்த விருத்தமென்க.

“கன்மிசைமஞ்ஞையிருந்துகலாபம்விரித்தாட
வின்மணிசிந்தரு வித்திரடாழ்ந்து விழுந்தோற்ற

முன்னியசேடன மஞ்ஞையையஞ்சி முரன்றெல்லே
தன்னுலகெய்துவ தன்மைதருங் கயிலாயத்தில்."

இது அஸ்வகதியில் கடைசீர் கூவிளங்காயாகாமல் அதுவே மாத்திரையுள்ள தேமாங்காய்வந்த விருத்தமென்க.

"ஆழியெனவிறைவனடி தொழுதுவருபவமாம்
ஆழியினையகலுமறி வருளுகெனவவனே."

இது வனமயூரத்தில் நேரசைக்கு நிரையசை வந்த விருத்தமென்க.

3. மூன்றாவது இவையல்லாத பிறவற்றையுங் கொள்க. அவை வருமாறு.

"பிழியார்பிறிவேதென்னும்
பெரியோய்தகவேவென்னும்
நெறியோவடியேம்நிலைநீ
நினையாநினைவேதென்னும்
வறியோர்தனமேயென்னும்
தமியேன்வலியேயென்னும்
அறிவோவினையோயென்னும்
அரசேஅரசேயென்னும்."

இது நான்குமாத்திரை மாச்சீர் ஆறுவந்த அறுசீர்ச்சந்தவிருத்தம்.

"நீலநின்றதொருநீலமால்வரை
நெடுந்தடக்கையினிடந்துநேர்
மேலெழுந்தரிவிசும்புசெல்வதொரு
வெம்மையோடுவரவீசலுஞ்
சூலமந்தகனெறிந்ததன்னது
துணிந்துசிந்தவிடைசொல்லுறுங்

காலமொன்றுமறியாமலம்புகொடு
கல்லினுனெடியவில்லினுன்."

இது குறிலிற்றுத் தேமாச்சீர் மூன்றும், மூன்று குற்றெழுத்து அந்தத்திலுள்ள கூவிளங்காய்ச்சீர் பின்னுமாக மாறிவந்து கடையொருசீரும் கூவிளச் சீராய் முடிந்த எழுசீர்ச்சந்தவிருத்தமென்க.

"நீர்கொண்டுதண்மலர்கொண்டுநன்
னெறிகொண்டுநின்குறிகொண்டுவன்
சீர்கொண்டுவந்தனைசெய்துனைச்
செறிவார்களென்பெறுவார்களோ
பேர்கொண்டிலன்பொறிகொண்டிலன்
பெரியோர்களாலருள்கொண்டிலன்
நார்கொண்டுகண்டருள்சோதியே
நாராயணுநாராயணு."

இது முதற்சீர் நெடிலிற்றுத் தேமாங்கனிச் சீராகவும், மற்ற மூன்றும் நெடிலிற்றுப் புளிமாங்கனிச் சீராகவும்வந்த விருத்தமென்க.

---

## ஒழிபியல்.

---

1. விளமதுவருமென விதித்தவிட்டினில்
விளமதுகொண்டிலாக் காயும்வேண்டுவார்
விளமதுநின்டது காயின்மேவது [லே.
முளதெனவோர்கவொண் டொடிக்கைத்தைய

(இ-ள்) விளச்சீர் வருமென்று விதித்த இடத்தில் மாங்காய்ச்சீரையும் வேண்டிப்பாடினுர். நெட்டெழுத்திற்று விளச்சீர் காய்ச்சீரிடத்திற் பொருந்

தனுமுளதென்றறிக. நெட்டெழுத்தென்பது மெய்யடுத்த குறிலன்று. (உ-ம்.)

> "பகவனேயீசன்மாயோன்
> பங்கயன்சினனேபுத்தன்
> பகலேநாளொருமுகூர்த்தம்
> பகலவனடுவேநேசு
> மகரமேகுருப்பூந்தாதாம்
> வசிகூர்மைவசியம்வாளே
> அகமனமனையேபாவ
> மகலிடமுள்ளுமாமே."

இது 'சீர்வளர் கமலச்செல்வி' எ-ம் முதல் தமிழ் விருத்தமாகையால் முதற்சீர் நான்காஞ்சீர் விளச்சீராதல் விதியாயினு மிவ்விதியால் 'பகலேநா' 'வசிகூர்மை' என மாங்காய்ச் சீராயின.

> " முன்னாலுந்துளைக்கரத்தோன்முருகவேள்
> பிடித்தெழுந்துமொய்ம்பிற்றூன
> பின்னாலுங்கதிர்ச்சடிலப்பிஞ்ஞகனை
> ரடித்தொண்டின்பெருக்கவீறு
> பொன்னாலும்பெண்ணாலுமறிவுறுத்திவ்
> வுலகினிடர்பொன்றியாண்ட
> வந்நால்வர்பதகமலமகந்தழீஇப்
> புகழ்ந்திறைஞ்சியரந்தைதீர்வாம்."

இது 'மதிநாறும் வாண்முகம்' என்னு மறுசீர்த் தமிழ் விருத்தமாகையால் முதல் நான்கும் காய்ச்சீராதல் விதியாயினும் 'முருகவேள்' 'அகந்தழீஇ' எனக்காய் வருமிடத்தில் நெட்டெழுத்தீற்று விளச்சீர் இவ்விதியாலமைந்ததென்க.

> " எண்ணிலாவருந்தவத்தோனியம்பியசொன்
> மருமத்தினெறிவேல்பாய்ந்த

புண்ணிலாம்பெரும்புழையிற்கன்னுழைந்தா
　　லெனச்செவியிற்புகுதலோடும்
உண்ணிலாவியதுயரம்பிடித்துந்த
　　வாருயிர்நின்றூசலாடக்
கண்ணிலான்பெற்றிழந்தானெனவுழந்தான்
　　கடுந்துயரங்காலவேலான்.''

இதில் 'எண்ணிலா' 'புண்ணிலாம்' 'உண்ணிலா' 'கண்ணிலான்' என நெடிலீற்று விளச்சீர்காயிடத்தில் வந்தமை காண்க.

2 கூவிளம்பலவெனக்குறித்தவெல்லையில்
　மேவருங்காய்த்தொடர் நேரும்வேண்டுவார்
　மாவினைத்தொடர் நிரையசையும்வைகுமால்
　ஓவியப்பதுமையே யனையவொண்டொடீ.

(இ-ள்.) பல கூவிளச்சீர்கள் வருமென்று குறித்த இடங்களில் கிடைத்தற்கரிய காய்ப்பின் நேரும் மாச்சீரையடுத்த நிரையசையும் பொருந்தும்.

" வாழிசானகி வாழியிராகவன்
வாழிநான்மறை வாழியரந்தணர்
வாழிநல்லற மென்றுறவாழ்த்தினன்
ஊழிதோறும் புதிதுறுகீர்த்தியான்.''

இதில் 'தோறும்' எ-ம்மாச்சீருக்குப் பின்'புதி'என்னும் நிரையசைவந்து கூவிளத்துக்குச் சமமாயிற்றென்க.

" ஈக்கள்வண்டொடு மொய்ப்பவரம்பிகந்
தாக்கமேமிகுந் துட்டெளிவின்றியே
தேக்கெறிந்து வருதலிற்றீம்புனல்
வாக்குதேனுகர் மாக்களைமானுமே.''

இதில் மூன்றாமடி யிரண்டாஞ்சீர் 'றிந்து' என்னுமாமுன் 'வரு' என்னும் நிரைவந்து விளச்சீரை யொத்தது.

> "அருளிலாளெனினும் மனத்தாசையால்
> வெருளுநோய்விடக் கண்ணின்விழுங்கலால்
> தெருளிலாவுலகிற் சென்றுநின்றுவாழ்
> பொருளெலாமவள் பொன்னுருவாயதே."

மூன்றாமடியில் 'கிற்சென்று' என்று காயும் அதன்பின் 'நின்' என நேரசையும் வந்தமைகாண்க.

> "கொள்ளைகொள்ளக் கொதித்தெழும்பாற்கடற்
> பள்ளவெள்ள மெனப்படருந்நிலா
> உள்ளவுள்ள வுயிரைத்துருவிட
> வெள்ளைவண்ண விடமுமுண்டாங்கொலோ."

> "அருத்தநோக்கின ரற்றிரண்மேனியார்
> பரித்தகாலினர் பப்பரரேகினர்
> திருத்துகூடத்திற் றிண்கணையத்தொடும்
> எருத்தினேந்திய மால்களிறென்னவே."

இவைகளுமுதாரணமாமாறு காண்க.

இதனால் மாமுன் நிரைக்கு காய்முன் நேர்வருவது முளதென்றமை கின்றது. (உ-ம்.)

> "கால்வானகத்தேருடைவெய்யவன்
> காய்கடுங்கட்
> கோல்மாய்கதிர்ப்புல்லுளைக்கொல்சினக்
> கோளரிம்மா
> மேல்பான்மலையிற்புக வீங்கிருள்
> வேறிருந்த
> மால்யானையீட்டமெனவந்து
> பரந்ததன்றே."

"நொய்தாங்குழவியெனக்கொள்சில
நோன்மைநாடின்
வெய்தாமவுணக்குழுவோரினும்
வெய்யன்யாரும்
எய்தாதமாயமுளனுலிவன்
றன்னைவெம்போர்
செய்தாடல்கொள்வழிவணென்று
தெரிந்து சூழ்ந்தார்."

இவற்றுள் 'மால்யானை' 'யிட்டம்' எனவும் 'எய்தாத' 'மாயம்' எனவும் 'ஓர்மா புளியொடுறுமா' என்னும் விதியால் மாமுன்னிரைவேண்டிய இடத்தில் காய்முன் நேர்வந்தமை காண்க.

3, நிரையொடுநேரசை நிற்றலாகுமென்
றுரையுளவிடத்தினி லுடம்புபின்றொடர்
இருகுறின்மொழியினையிருத்தியொன்றைமுன்
னுரைதருசீரொடும்புணர்ப்பவன்னிலார்.

(இ-ள்.) நிரையசையேனும் நேரசையேனும் நிற்றலாகுமென்று சொல்லிய இடங்களில் இரண்டு குற்றெழுத்தைச் சேர்ந்த ஒரு மெய்யையுடைய சொல்லை வைத்து ஒரு குறிலை முன்னைய சீரொடுங் கூட்டமாட்டார்.

நேரும் நிரையு மிரண்டும் வருமாகையால் ஒரு குறிலை முன் சீரோடு கூட்டிப் பின்னையதை நேராகச் செய்திலரென்க.

"சென்று கருத்தையின்றே தேரினைவருதி யென்றான்" இவ்வடியை சென்றுக, ருத்தை, யின்றே எனப் பிரித்தால் முதல் தமிழ் விருத்தத்தின் சீரிலக்கணம் பொருந்துமேனும், இவ்விதியாற் பிழையாகுமென்க 'சீர்விளமாச்சீர் தேமாச்சீரிணைந்திரட்டு மீங்கே' என்ற விதியால் இவ்விருத்தத்தினிரண்டாம் சீர் புளி

மாவாகினும் தேமாவாகினும் வரப்பெறுமாகையால் கருத்தை யென்பதை புளிமாவாகக் கொள்ளாமல் ககரத்தை முன் சிரோடு சேர்த்து விளமாக்கி 'ருத் தை'யென்று தேமாவாகக் கொள்ளார். நிரையசை வருதற்குரிய இடத்தில் நிரையசையுள்ள மொழி வருமெனின் அது நிரையசையாகவே யிருத்தல் வேண்டும். அதை நேரசையாகச்செய்திலார்.

'வருக பெரும்படையென்று வாக்கினால்' இதுவும் மேற்காட்டிய பிழைபடும் விருத்தமேயாம்.

4. மொழியொடுசீர்வழிமுரணுமாகலின்
மொழியதுகடைநிகழ்குறிலைமுன்னிலா
மொழியொடுமுடித்துமெய்யுடைக்குற்றிருயிர்
பிழையறுகூறிரண்டாலும்பேணுவார்.

(இ-ள்.) மொழிகள் செல்லும் வழியாகச் சீர் கள் செல்லாவாகலின் மொழிக்குக் கடையிலிருக் கின்ற குற்றெழுத்தைப் பின்மொழியுடனுஞ் சேர் த்து முடித்து இரண்டு குறிலு மதன்பின் ஒரு மெய் யுமுடைய பதத்தையேனும் பதத்தின் முதலசை யையேனும்இரண்டுபாகமாகவும்விரும்புவார்(உ-ம்)

"இறந்தனர்பிறந்தபயனெய்தினர்களென்கோ
மறந்தனரறிந்துணர்வுவந்தனர்களென்கோ [கோ
துறந்தவுயிர்வந்திடை தொடர்ந்ததுகொலென்
திறந்தெரிவதென்னைகொலிநன்னுதலிசெய்கை."

இதை 'இறந்தனர்பி' 'றந்தபய' எனப் பிரிக்க, பிறந்த என்பது இரண்டு கூறுனமைகாண்க.

"என்றென்றுயிர்விம்மியிருந்தழிவாள்
மின்றுன்னுமருங்குல்விளங்கிழையாள்
ஒன்றென்னுயிருண்டெனினுண்டிடர்பான்
பொன்றும்பொழுதேபுகழ்பூணுமெனு."

இதில் 'விம்மி' என்பதனீற்று மிகரம் 'யிருந்து' என்னும் வருமொழியோடுசேர்ந்தமைகாண்க.

5. வறியாரொனவல்லொலியோங்கலிலாக்
குறியேயெறியப்படுகொள்கையதே
நெறிவேண்டுழியே நிலையாமதுவே
வறியாரொருகால் வகையாகுவபோல்.

(இ-ள்.) ஏழைகள்போல் நல்ல வொலியில்லாத எழுத்து (சந்தத்தில்) நீக்கப்படும் தன்மையுள்ளது விதிக்கு வேண்டிய இடத்தில் அவ்வெழுத்தே நிலையாகும் ஒரு காலத்தில் ஏழைகளும் உபயோகமாகக் கொள்ளப்படுவதைப்போல் எ-று.

ஏழைகளை நீக்குவதும் வேண்டுழிக் கொள்வதும் உலகவழக்கமன்றி நீதியல்லாமைபோல், வல்லொலியற்ற எழுத்தை நீக்குவதுங் கொள்வதுங் கவிகள் வழக்கமன்றி யொழுங்காகா தென்க.

'நெறிவேண்டுழியே' என்பதை மத்திப தீபமாகக்கொள்க.

'நீண்டவிழிநேரிழைதன்மின்னினிறமெல்லாம்
பூண்டதொளிர்பொன்னனையபொம்மனிறமெய்யே
ஆண்டகைதன்மோதிரமடுத்தபொருளெல்லாம்
தீண்டளவில்வேதிகைசெய்தெய்வமணிகொல்லோ'

இதில் 'நேரிழைதன்' என்பதில் 'ன'கரமெய்யும் 'பூண்டதொளிர்' என்பதில் ரகரமும் 'ஆண்டகைதன்' என்பதில் னகரமெய்யும், 'தீண்டளவில்' என்பதில் லகரமெய்யும் நீக்கப்படுவனவென்க. நீக்காவிடின் வனமயூர விதிக்கு விரோதிக்குமென்க.

6. உயரக்கரமொன்று மிகுந்துகுறைஇ
இயலுந்திறனு னிதுவோவெதுவோ

பயிலும்பெயரோ பகர்தற்கெதிரொன்
றயர்வுற்றிடலக் கவியேயெனலே.

(இ-ள்.) ஒரு மாத்திரை மிகுந்துங்குறைந்தும் வருகையால் (ஒரு விருத்தத்தின்) பெயர் இதுவாமோ ஏதுவாமோ சொன்ன விதிக்கு விரோதிக்கின்றதென்று கவலைப்படாமல் அதுதானென்றுசொல்லுக.

உதாரணம்.

'செய்தாயேனுந்தீவினையோடும்பழியெல்லாம்
எய்தாதெய்தாதெய்தினிராமன்னுலகின்முன்
வைதாலன்னவாளிகள்கொண்டுன்வழியோடுங்
கொய்தானன்றேகொற்றமுடித்துன்குழுவெல்லாம்'

இதில் மூன்றுமடி யிரண்டாஞ்சீராகிய 'அன்ன' எ-து ஒரு மாத்திரை குறைந்திருப்பதால் இவ்விருத்தம் மத்தமயூரமோ வேறெதுவோவென்று சந்தேகிக்காமல் மத்தமயூரமேயென்க.

"இனமுறவென்னவுள்ளகரணத்திலொன்ற
தெனலாவிதென்னுதெனலால்
மனமுநீயல்லவென்றவதனாலுமுந்து
மதியல்லவந்தவகையே."

இங்கு 'மனமுநீ' குறிலீற்றுக்கு நெடிலீறு வந்ததேனும் 'அழிவறுகாயமீட்டி' எ-ம் விருத்தமாகவே கொள்க.

விருத்தப்பாவியல்

முற்றிற்று.

---

